உ

தெய்வமேதுணை.

# திருத்தணிகை

சிவசுப்ரமணியக்கடவுள்பேரில்

## மாதப்பதிகம், வாரப்பதிகம்,

தணிகாசலக்கண்ணிகள்.

இஃது,

சிறுமணவூர்,

முனிசாமிமுதலியா

ரவர்களால் இயற்றப்பட்டு,

தமது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

எமது அச்சுக்கூடத்தில் விற்பனைக்குத்தயாராயிருக்கும்

# புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் ஒஸ்திபதிப்பு | 4 | 0 | 0 |
| சாதாரண பாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இந்துலா [அச்சிலிருக்கிறது] | 4 | 0 | 0 |
| சோதிடசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 8 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| இந்தியன் பீனல்கோட் ராயல் ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| கிராம முனிசிப்கோர்ட் ராயல் கிளேஸ் | 3 | 0 | 0 |
| கிரிமினல்கோர்ட் சட்டம் [அச்சிலிருக்கிறது] | 2 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| உலகவிசித்திரக்கதை ஒஸ்திபதிப்பு | 1 | 0 | 0 |
| விக்கிரமாதித்தன் கதை கிளேஸ் | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள் சரித்திரம் | 0 | 12 | 0 |
| விராடபர்வம் ராயல் 8-பேஜ் லெத்தோபடத்துடன் | 0 | 12 | 0 |
| பட்டணத்தார்புராணம் ராயல் 16-பேஜ் லெத்தோபட | 0 | 12 | 0 |
| பார்வதிபரணியமென்னும் விஷவைத்தியசிந்தாமணி | 0 | 12 | 0 |
| நஷ்டஜாதகம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆரூடம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மூலிகைமர்மம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| திருத்தணிகைச் சன்னதிமுறை திக்கு | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| சிவவாக்கியம் 1000-ம்பாடல்கள் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மனமோகனக்கண்ணாடி கிளேஸ் | 0 | 8 | 0 |
| ஜெகத்தர்ஷா கிளேஸ் | 0 | 8 | 0 |
| புலவுநூல் இந்தியா சமையல்சாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| கண்கட்டுவித்தை | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 6 | 0 |
| சகாதேவர் சோதிடநாடி | 0 | 6 | 0 |
| திருநேத்திரசிந்தாமணி | 0 | 5 | 0 |
| பெண்கள் ருதுஜெனனஜாதகம் | 0 | 4 | 0 |
| சர்வபிரயாண சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| வாந்திபேதி நிவாரணு | 0 | 2 | 0 |
| எருக்குபஞ்சபட்சி | 0 | 2 | 0 |
| சைவானுஷ்டானவிதி | 0 | 2 | 0 |
| அவிவேகபூரணகுருகதை | 0 | 1 | 6 |
| விபூதி ருத்திராட்ச மகத்துவம் | 0 | 1 | 3 |

இப்படிக்கு,

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,
நெ. 12. சட்டண்ணை நாய்க்கன் வீதி,
சூளை போஸ்டு, மதிராஸ்.

உ

தெய்வமே துணை.

# தணிகாசலக்கடவுள்

## பேரில்,

## மாதப்பதிகம்.



வேண்பா.

தணிகா சலமேவுந் தற்பரனை வேண்டித்
துணிவா யிருபதிகஞ் சொல்ல—மணிசேர்
பணிதுலங்கு தோளான் பகரானை மாமுகன்ற
ளணியாய் தலைக்கணிகு வாம்.

சித்திரைமாதம்.

அத்திமுகத்தோ னருந்துணைவாவிவ் வகிலமெல்லாஞ்
சுத்திபொருநொடிக் குள்ளேவலஞ்செய்த சூத்திரனே
முத்தமிழ்க்கிர விடர்தீர்க்கத்தட்சணை முயன்றதுபோல்
சித்திரைமாதம் வருவாய்த்தணிகையிற் சேவகனே.

### வைகாசிமாதம்.

கையாறநின்கழல் போற்றிசெய்தேனென் கனவிலெல்லாம்
மெய்யாகவேவந்த தன்மையென்றுவிந்த மேதினியில்
செய்யாவினையென்ன செய்திருந்தாலுமச் சீற்றமற்று
வையாசிமாதம் வருவாய்தணிகையில் வாழ்பவனே.

### ஆனிமாதம்.

மானிலமளந்த மால்மருகாயிந்த மானிலமும்
ஞானியுமுனிவரும் நான்முகனுந்தொழு நாயகனே
தேனில்விழுந்த யீப்போல்திகைத்துனைத் தேடுகின்றேன்
ஆனிமாதத்தில் வருவாய்தணிகையி லாண்டவனே.

### ஆடிமாதம்.

ஓடியுலாவும் பருவத்திலேயிந்த ஊழ்வினைதா
னோடித்தொடர்ந்து தையோயிதற்கென்ன நானறிவேன்
பாடித்துதிக்கும் பதங்கொடுத்தாயந்தப் பக்குவம்போல்
ஆடிமாதத்தில் வருவாய்தணிகையி லாண்டவனே.

### ஆவணிமாதம்.

சேவலங்கொடியுடை சேவகனேதுதி செய்பவர்க்குங்
காவடிக்கொண்டு வருமடியார்க்குங் கருணைவைத்து
மாவினையாவையுந் தீர்க்கவென்றேமலை மேனின்றுய்
ஆவணிமாதம் வருவாய்தணிகையி லானந்தனே.

### புரட்டாசிமாதம்.

இருட்டானமேனி யசுரரைச்சாய்த்து யிமையவர்மேல்
அருட்பார்வைநோக்கிய யாண்டவனேயடி யேனைவினை
வெருட்டாமல்காக்க வேண்டுகின்றேன்வெற்றி மாமயில்மேல்
புரட்டாசிமாதம் வருவாய்தணிகையிற் புண்ணியனே.

### ஐப்பிசிமாதம்.

கப்பியவூழ்வினைத் தீர்ப்பையென்றேநின் கமலமதில்
ஒப்புவித்தேன்மனத் துள்ளதெல்லாமிகு வுத்தமனே
தப்பிதமெத்தனை செய்திருந்தாலுநின் தஞ்சமென்றேன்
ஐப்பிசிமாதம் வருவாய்தணிகையி லற்புதனே.

## கார்த்திகைமாதம்.

தீர்த்தமனேகங்கள் மூழ்கிவந்தேன்வினை தீர்ந்திலையால்
மூர்த்திகள்மூவர் முதல்வனுக்கேமறை முடிவுரைத்து
கீர்த்திவகித்த சண்முகனேகதி வேறறியேன்
கார்த்திகைமாதம் வருவாய்தணிகையிற் காவலனே.

## மார்கழிமாதம்.

சீர்மலிந்தோங்கு முலகமெல்லாநின் சேவடிக்காய்
கார்மலிந்தோங்கு வண்ணமன்றோயின்பக் கட்டளையால்
ஏர்மலிந்தோங்கு கவிவாணரன்பர்சொல் லேற்றதுபோல்
மார்கழிமாதம் வருவாய்தணிகையில் மன்னவனே.

## தைமாதம்.

பொய்யானவாழ்க்கையை மெய்யாகநம்பியிப் பூதலத்தில்
மையாடுகண்ணியர் மயலால்மெலிந்து மயங்குகின்றே
னையாவுனையன்றி திக்கறியேன்வினை யார்தவிர்ப்பார்
தைமாதந்தன்னில் வருவாய்தணிகைத் தயாபரனே.

## மாசிமாதம்.

பூசித்திறைஞ்சு மடியாரிருதயம் பூரிக்கவன்பு
நேசித்துவந்து வினையுங்கவலையும் நீக்குகின்ற
தேசிகனேதெய்வ நாயகனேயுனைத் தேடுகின்றேன்
மாசிமாதத்தில் வருவாய்தணிகையில் மாமணியே.

## பங்குனிமாதம்.

எங்கெங்குமோடியும் வினையகலாமலென் னிருதயத்தை
பங்கிட்டுநின்மலர் பதத்தில்வைத்தேனிது பத்தியமாம்
மங்களவள்ளியுந் தெய்வானையோடு மனமகிழ்ந்து
பங்குனிமாதம் வருவாய்தணிகையிற் பண்ணவனே.

மாதப்பதிகம் - முற்றியது.

---

# வாரப்பதிகம்.

## ஆதிவாரம்.

நீதிக்கிசைந்த தெய்வமென்றேயிந்த நீணிலத்தோர்
ஓதித்துதிக்கு முண்மையினலெந்த னூழ்வினையைச்
சோதித்துநீக்கிச் சுகத்தைக்கொடுக்கநற் றேகையுடன்
ஆதித்தவாரம் வருவாய்தணிகையி லாண்டவனே.

## சோமவாரம்.

பொங்குகடல்சூ ழுலகமெல்லாமுன்னைப் போற்றுதலால்
அங்கந்தளர்ந்தமிக மெலிந்தடியேனுனக் கபயமென்றேன்
எங்குந்திரிந்து உழலாமலென்முறை யேற்றருளித்
திங்கட்கிழமை வருவாய்தணிகையிற் றேசிகனே.

## மங்களவாரம்.

ஒவ்வாதவாசைப் பெருவாரியில்நெஞ்சு ஞ்சலிட்டால்
எவ்வாறுநல்ல நிலையினிற்பேனென்ன வூழ்வினையோ
இவ்வாறுயென்னை யயலாய்நினைக்கிலிங் காருதுணை
செவ்வாய்க்கிழமை வருவாய்தணிகையிற் சேவகனே.

## புதவாரம்.

இதமாகநெஞ்சுக் கெத்தனைச்சொன்னு மிவ்வுலகைச்
சதமாகவேநம்பி வாதிக்குதேயிந்த சஞ்சலத்தை
பதமாகநீக்கி நினையேதொழப்பச்சை மாமயில்மேல்
புதவாரந்தன்னில் வருவாய்தணிகையிற் புண்ணியனே.

## குருவாரம்.

ஒருவருந்துணையில் லில்லையென்றேயுந்த னுயர்பதத்தை
மருவிப்பிடித்து மன்றுடுவேன்மன மேனிரங்காய்
அருமாமறைக்கு ஆதியனேயெனை யாதரிக்கக்
குருவாரந்தன்னில் வருவாய்தணிகைக் கொற்றவனே.

## சுக்கிரவாரம்.

கள்ளமனத்தின் கவலையுந்தேகக் கடுவினையும்
எள்ளத்தனையு மில்லாமற்காக்க யிதுசமயம்
வள்ளிப்புனத்தில் வெகுவித்தைசெய்த வாலிபன்நீ
வெள்ளிக்கிழமையில் வருவாய்தணிகையில் வேலவனே.

## சனிவாரம்.

அனியாயநவக்கிர கச்சேட்டையினல்நொந் தடுக்குலைந்தேன்
முனியாமலென்முறைக் கேட்டருள்வாய்குரு மூர்த்தியனே
இனியேதெமக்குக் குறையென்னவென்றிரு மாந்திருக்கச்
சனிவாரந்தன்னில் வருவாய்தணிகையிற் சண்முகனே:



பன்னிருமாதமும் வாரங்களேழும் பகலிரவும்
உன்னிருதாட்டொழுங் கடமையுள்ளேனிது வுண்மைகண்டாய்
என்னிருதயத்துக் கவலையுமூழு மெடுத்தெறிந்து
முன்னின்றுகார்க்குங் கடனெந்தகாலமு முன்னதுவே.

வாரப்பதிகம்-முற்றிற்று.



# தணிகாசலக் கண்ணிகள்.

செல்வமணியே சிவமணியேபல்லுயிரும்
சொல்லுமணியேயென் சுவாமிதணிகாசலனே. (1)

போற்றவறியேன் புகழறியேனென்குறையை
சாற்றவறியேனென் சுவாமிதணிகாசலனே. (2)

பக்தியறியேன் பணியறியேன்வேறுவித
சித்தியறியேனென் சுவாமிதணிகாசலனே. (3)

ஓதவறியேனொருநாலுங்கற்றறியேன்
சூதுமறியேனென் சுவாமிதணிகாசலனே. (4)

தருணமிதுவினையை தாளமுடியேனடியேன்
சரணஞ்சரணமையா சுவாமிதணிகாசலனே. (5)

பொருக்கமுடியேனென் பழவினையையாராய்ந்து
சுருக்கிலகற்றுமையா சுவாமிதணிகாசலனே. (6)

கல்லோயிரும்போதான் கடுமனமோதொண்டர்களால்
சொல்லுமுறைக்கேளாதோ சுவாமிதணிகாசலனே. (7)

நீதிக்கடவுளென்று நின்னடியைத்தேடிவந்தால்
சோதிக்கக்கூடாதென் சுவாமிதணிகாசலனே. (8)

மன்னுயிருக்கோரிடுக்கும் மனமறியநானறியேன்
என்னைவினைச்சூழ்ந்த தேதுதணிகாசலனே. (9)

பிறப்பதற்குமுன்னிழைத்த பாபமோதாய்வயற்றில்
உருப்பெடுத்தபின்னறியே னுண்மைதணிகாசலனே. (10)

வருமைப்பிடித்தாலும் வயிற்றைவளர்த்திடுவேன்
கருமவினைதீர்ப்பாய் கனகதணிகாசலனே. (11)

என்னையொருபொருட்டா யெண்ணிநீவந்துரைத்த
தன்மைமறந்துவிட்டேன் ஞானதணிகாசலனே. (12)

உன்னைச்சிலகா லுனைக்கமறந்ததினால்
முன்னைவினைக்காளானேன் மோனதணிகாசலனே. (13)

பட்டேன்வெகுகோடி பட்டுகெட்டுநின்னடியை
தொட்டேனினிகார்ப்பாய் துரியதணிகாசலனே. (14)

சிறுமணவுமொன்றளவிற் செகமறிந்ததல்லாது
ஒருமணமும்பெற்றேனோ வுரைசெய்தணிகாசலனே. (15)

தெய்வமே துணை.